23rd March 1961]

*Bus service (Chamarajanagar-Coimbatore)*

* 1036 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether any agreement has been made between Madras and Mysore Governments for running a passenger bus service between Chamarajanagar and Coimbatore; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) There is a proposal under consideration for running a bus service on the route Mysore to Coimbatore *via* Chamarajanagar and Satyamangalam. The matter is under correspondence with the Government of Mysore.

SRI N. K. PALANISAMI : May I know, Sir, whether the permit would be given to the State Transport or private operators soon after the agreement is reached between this Government and Mysore Government?

THE HON. SRI V. RAMAIAH : This has to be discussed with the Government of Mysore.

SRI P. G. MANICKAM : ஸார், கோயம்புத்தூரிலிருந்து மைசூர் ராஜ்யத்தின் எல்லைக்குள்ளிருக்கும் தாளவாடி வரைக்கும் ஒரு புது பஸ் ரூட்டை ஏற்படுத்துவதற்காக நமது சர்க்காரும், மைசூர் சர்க்காரும் ஏதாவது கடிதப் போக்குவரத்து நடத்தி வருகிறார்களா ? அப்படியானால் அதன் விவரங்கள் யாவை ?

THE HON. SRI V. RAMAIAH : தனியாக கேள்வி போடவேண்டும்.

*Sub-Registrar's office at Sendhurai*

* 1037 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் மின்சார அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலூகா செந்துரையில் சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் திறக்க வேண்டுமென்று அந்தப் பகுதி மக்கள் அரசாங்கத்திற்கு மகஜர் அனுப்பினார்களா ?

(இ) அப்படியானால், அதன்பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Yes, Sir.

(*b*) The proposal for opening a Sub-Registry Office at Sendurai in Udayarpalayam taluk, Tiruchirappalli district was considered and deferred in the past. The proposal has again been taken up for consideration with certain other similar proposals. Final decision has not yet been taken in the matter.

SRI S RAMALINGA PADAYACHI : நீண்ட நாளாக இந்தப் பிரச்னை அரசாங்கத்தால் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆந்திரா மாகாணப் பிரிவினையின் காரணமாக ஒத்திவைக்கப்பட்டது. ஆகையால் இதன் அவசியத்தை உணர்ந்து கனம் அமைச்சர் அவர்கள் உடனடியாக இதை ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : செந்துரையில் சப்-ரெஜிஸ்டிரார் ஆபீஸ் வேண்டுமென்று அங்குள்ள மக்கள் கருதுகிறார்கள். அதை ஒரு காலத்தில் பரிசீலனை செய்ய முடியாமல் இருந்தது. இப்போது எங்கெங்கு உடனடியாக திறக்கவேண்டும் என்பதைப் பற்றி பரிசீலனை செய்து அதன்